# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்    நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN ):978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 32 திருவள்ளுவர் ஆண்டு 2053 சனவரி –2023

## உள்ளே...














# அருங்காட்சியகத்துறைக் கலைச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| Aerophone | காற்றிசைக் கருவி | Exhibition technique | பொருட்காட்சி அமைக்கும் நுட்பம் |
| Animal figurine | சிறு விலங்குச்சிலை | Frescoes | சுவர்க்கோல ஓவியம் |
| Archival material | ஆவணக் காப்புப் பொருள் | Horologue | நேர அளவி / கால அளவி |
| Astronomical museum | வானியல் அருங்காட்சியகம் | Microfilming unit | நுண்படச் சுருளாக்கப் பிரிவு |
| Burial urn | முதுமக்கள் தாழி / புதைதாழி | Mobile exhibition | நடமாடும் கண்காட்சி |
| Celestial globe | வான விளக்கப்படம் | Museo–engineering | அருங்காட்சியகப் பொறியியல் |
| Children's museum | சிறார்அருங்காட்சியகம் | Open air museums | திறந்தவெளி அருங்காட்சியகங்கள் |
| Display stand | காட்சிப் பொருட்கள் நிறுத்தீடு | Pen–pistal | தூவல் வடிவத் துமுக்கி |
| Documentation | ஆவணத் தொகுப்புப் பேணுகை | Pottery coffin | சுடுமண் பிணப்பெட்டி |
| Documentation | ஆவணச் சான்று பேணுகை | Rural museum | ஊரக அருங்காட்சியகம் |
| Evolutionary model | படிநிலை வளர்ச்சி தோற்றப் படிமம் | Static museum | நிலை அருங்காட்சியகம் |
| Exciting display | மெய்சிலிர்க்கும் காட்சியமைவு | Thematic exhibition | கருப்பொருள் கண்காட்சி |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 நளி (மார்கழி)
சனவரி – 2023

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க.கஸ்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அலைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN ): 978-81-958032-0-0

# எண்ணின் உருக்களும் மண்ணின் மொழியே!

உலகின் முதன்மொழி வரிசையில் வைத்துப் போற்றத்தக்கது என்று வரலாற்றாளர்களால் புகழப்படும் மொழி தமிழ்மொழி. உலகில் சங்கம் வைத்து வளர்க்கப்பட்ட தமிழ்மொழியின் சிறப்பே அதன் சொல்வளம் ஆகும். தமிழில் உள்ள எழுத்துகளின் ஒலிகள் இயற்கை நடையிலும் எளிமை முறையிலும் உள்ளன. அதனால் எந்த இடர்ப்பாடுமின்றி ஒலிக்க முடிகிறது. தமிழ்மொழியானது தொன்மை, முன்மை, எளிமை, ஒண்மை. இளமை, வளமை, தூய்மை, தாய்மை, தனிமை, செம்மை. மும்மை, பெருமை, திருமை, இயன்மை, வியன்மை எனப்பலவகைச்சிறப்புகளைஒருங்கேயுடையது என்கிறார் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர். இத்தகைய தமிழ்மொழி மண்ணின் மொழியாகவும் விண்ணின் மொழியாகவும் எண்ணின் மொழியாகவும் விளங்குவதில் வியப்பில்லை. தமிழ் எண் வடிவங்கள் எழுத்து வடிவங்களை ஒத்துக் காணப்படுகின்றன. உலகின் மற்றமொழிகள் எல்லாம் செவிக்குக் கருத்தை உணர்த்தும் போது நம் தமிழ்மொழி இதயத்தை அடையக்கூடியது. தமிழ்மொழியைப் பேசும் போது இயல்பாகவே மூச்சு(சுவாச)ப்பையிலிருந்து குறைந்த காற்றே வெளியேறுகிறது. இவ்வாறு அதிக மூச்சுக்காற்றை வெளியேற்றாமல் இருந்தோமேயானால் நீண்ட நாள் வாழலாம் என ஆய்வுகள் கூறுகின்றன. இதிலிருந்து அமிழ்தினும் இனிய தமிழ்மொழியைப் பேசினால் வாழ்நாள் நீளும் என்பதை அறிந்துகொள்ளலாம்.

தொல்காப்பியர் முழு எண்களை எண்ணும் சொற்களைக் குறிப்பிடுகின்றார். அவற்றை ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம், நூறாயிரம் எனப் பத்தின் மடங்குகளாகக் கூறுகின்றார். கோடி என்னும் சொல் கடைசி எல்லையைக் குறிக்கும். கோடிக்கு மேல் உள்ள எண்களைத் தொல்காப்பியர் "அல்பெயர்" எண் என்று குறிப்பிடுகின்றார். தாமரை, வெள்ளம், ஆம்பல் என்பவை அந்த எண்கள். பண்டைய தமிழர்கள் மிகப்பெரிய எண் அளவு முதல் மிகச் சிறிய அளவு எண்கள் வரை அறிந்திருந்தனர் என்பதே வியப்பை ஏற்படுத்துகிறது. ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு, நாலடியார், கார்நாற்பது, களவழி நாற்பது எனச் சங்க நூல்களின் பெயர்களைப் பார்த்தாலே அவர்களுக்கு எண்கள் மீது இருந்த பற்றுப் புலப்படும். தெய்வப் புலவர் திருவள்ளுவரும் " எண்ணென்ப ஏனை எழுத்தென்ப" என்று எண்ணுக்கு முதன்மையளித்ததை அறியமுடிகிறது. நம் தமிழ் மூதாட்டியாம் ஔவையும் "எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்" என்கிறார். "எண்ணெழுத்து இகழேல்" என்கிறது மூதுரை.

பண்டைத் தமிழர்கள் பயன்படுத்திய பனையோலைகளைக் கட்டுக்கட்டாகக் கட்டிவைத்தனர். இத்தகைய கட்டுக்கு எழுத்துச்சுவடி என்று பெயரிடாமல் "எண்சுவடி" என்றே பெயரிட்டனர். சங்கச் சான்றோர்கள் அறிந்த பல எண்ணுப் பெயர்கள் இலக்கியங்களில் காணப்பெறுகின்றன.

### ஐங்குறுநூறு

பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடிய,

"நீலமேனி வாலிழை பாகத்தொருவனது
இருதாள் நிழற்கீழ் மூவகை உலகும்
முகிழ்ந்தன முறையே"

என்ற கடவுள் வாழ்த்துப் பாடலில், பாகம் என்பது அரையைக் குறிக்கும் (உமையொரு பாகன்). இதிலிருந்து அரை, ஒன்று, இரண்டு,

மூன்று என எண்ணுப்பெயர்கள் இப்பாடலில் பாங்குற அமைந்திருப்பதை அறியமுடிகிறது.

### ஓங்கு பரிபாடல்

கடுவனிளவெயினார் திருமாலை எண்களின் வாயிலாகவே வழிபடுகின்றார்.

"பாழெனக் காலென பாகென ஒன்றென
இரண்டென மூன்றென நான்கென ஐந்தென
ஆறென ஏழென எட்டெனத் தொண்டென"

இப்பாடலில் சுழியம் (பூஜ்ஜியம்), கால், அரை, ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, தொண்டு (ஒன்பது)என வரிசையாக அமைத்துள்ளார். இவ்வெண்களில் இறைமையை உணர்த்தும் தத்துவம் உள்ளது.

பழங்காலத்தில் ஒன்பதைக் குறிக்க தொண்டு என்ற சொல்தான் பயன்படுத்தப்பட்டது. தொல்காப்பியம், மலைபடுகடாம், சிலப்பதிகாரம் ஆகிய நூல்களிலும் தொண்டு என்றே குறிக்கப்பட்டுள்ளது.

"மெய்பெறு மரபின் தொடைவகை தாமே
ஐ ஈ ஆயிரத்து ஆறு ஐந்நூற்றொடு
தொண்டு தலையிட்ட பத்து குறை எழுநூற்று"

(தொல்.பொரு.40)

மலைபடுகடாமில், "நொடி திரித்தன்ன தொண்டு" என்றும், சிலப்பதிகாரத்தில், "தொண்டு படுநிலவின் முண்டக" எனவும் உள்ளது.

### பேரெண்களுக்கு எண் மதிப்பு

"ஏகம் எண் மடங்கு கொண்டது கோடி
கோடி எண் மடங்கு கொண்டது சங்கம்
சங்கம் எண் மடங்கு கொண்டது விந்தம்
விந்தம் எண் மடங்கு கொண்டது குமுதம்
குமுதம் எண் மடங்கு கொண்டது பதுமம்
பதுமம் எண் மடங்கு கொண்டது நாடு
நாடு எண் மடங்கு கொண்டது சமுத்திரம்
சமுத்திரம் எண் மடங்கு கொண்டது வெள்ளம்"

– பிங்கல நிகண்டு

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்"

என்று பெரியாழ்வார் திருமாலுக்குத் திருப்பல்லாண்டு பாடியதை நாம் உணர்தல் வேண்டும். தமிழில் ஒவ்வொரு எண்ணுக்கும் தனியாகச் சொற்கள் உள்ளன. ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பத்தாயிரம், நூறாயிரம், பத்துநூறாயிரம், கோடி, அற்புதம், நிகற்புதம், கும்பம், கணம், கற்பம், நிகற்பம், பதுமம், சங்கம், வெள்ளம், அந்நியம், அர்த்தம். பரார்த்தம், பூரியம், முக்கோடி, மகாயுகம். இதில் மகாயுகம் என்பது ஒன்றுக்குப் பின்னால் 33 சுழியங்கள் வருவது ஆகும்.

மகாயுகம் – 1, 00, 00,00,00, 00,00,00,00,00,00 ,00,00,00,00,00,000

தமிழர்கள் உலகையே கட்டி ஆண்டனர் என்பதற்கு இதைவிட சான்று வேறு உண்டா? அதுபோல் "0" என்பது எதுவுமற்றது. இதைச் சூன்யம், பூஜ்ஜியம், சுன்னம், சுழியம் என்று பல பெயர்களால் கூறினாலும் சங்க இலக்கியம் பாழ் என்னும் அருமையான சொல்லாட்சியால் அழைக்கின்றது.

360 நெல் – 1 செவிடு
5 செவிடு – 1 ஆழாக்கு
2 ஆழாக்கு – 1 படி
8 படி – 1 மரக்கால்
21 மரக்கால் – 1 கோட்டை

இவ்வாறு எணணல் அளவியலிலும் அழகான தனித்தமிழ்ச் சொற்கள் உள்ளன. இது பலருக்கும் தெரியாது. தமிழின் உட்புகுந்தவர்க்கே தட்டுப்படும்.

பெருஞ்சேரல் இரும்பொறையின் வெற்றியைப் பாடிய அரிசில்கிழாருக்கு ஒன்பது நூறாயிரம் காணம் பொன் தந்த நிலையினையும் (பதிற்றுப்.8) ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்

காக்கை பாடினியாருக்கு நூறாயிரம் காணம் பொன் தந்த நிலையினையும், உருந்திரங்கண்ணனார் பதினாறு நூறாயிரம் பொன் பெற்ற நிலையினையும் (பெரும்.442–80) காண, "இலட்சம்" வழக்கில் இல்லை என்பதையும். "நூறாயிரம்" வழக்கில் இருந்தது என்பதையும் அறிகிறோம்.

தமிழ்ப் பாடல்களில் எண் உருக்களைக் கொண்டு விளையாடிய தமிழ் மூதாட்டி ஔவை,

"எட்டேகால் இலட்சணமே எமனேறும் பரியே
மட்டிப் பெரியம்மை வாகனமே முட்டமேல்
கூரையில்லா வீடே குலராமன் தூதுவனே
ஆரையடாச் சொன்னாய் அது"

என்று பாடுகிறார். அதாவது. எட்டு என்ற எண்ணுக்கான தமிழ் எண்ணுரு "அ".

கால் என்ற எண்ணைக் குறிக்கும் தமிழ் எண்ணுரு "வ". எனவே, எட்டேகால் இலட்சணமே என்றால் "அவலட்சணம்" என்று பொருள்படும். எண்ணும் எழுத்தும் சொல்லும் பொருளும் பின்னிப் பிணைந்து விளையாடுவதை இப்பாடலில் நாம் சுவைத்து மகிழமுடியும்.

திருவருட்பாவில் நடராச அலங்காரத்தில் "இரண்டே காற்கை முகம் கொண்டார்" என்ற சொற்றொடரை இராமலிங்க அடிகள் பயன்படுத்தியிருப்பார். இரண்டு என்பதன் தமிழ் எண்ணுரு "உ". கால் என்பதன் தமிழ் எண்ணுரு "வ". எனவே, இரண்டே காற்கை முகம் என்பதற்கு "உவகை" என்று பொருளாகின்றது. இரண்டே கால்கை வந்த விதம் எவ்வளவு அழகு!

சங்கச் சான்றோர்களும், தமிழறிஞர்களும், புலவர்களும். புலவர்களாக விளங்கிய மன்னர்களும் எனப் பலதுறை சார்ந்த பெருமக்களும் தத்தம் பங்களிப்பைத் திறம்படத் தந்து மொழி காத்துள்ளனர். ஆனால் இன்றைய இளம் தலைமுறையினர், இவற்றையெல்லாம் அறியாது வாழ்கின்றனர். நொடிப் பொழுதும் பிரியாத கைப்பேசியில்கூட தமிழ் இல்லை என்பது வருத்தத்திற்குரியது. மொழியின் வளம் காக்கும் பண்பாட்டுப் பெட்டகங்களை அவர்களிடத்தே கொண்டு சேர்க்க வேண்டி கடப்பாடு நம் அனைவருக்கும் இருக்கிறது.

எதை எதையோ கண்டு வியக்கும் நாம் எண்ணில் கூட வியக்க வைத்த நம் அன்னைத் தமிழின் அருமையை எண்ணி எண்ணி வியந்து மகிழ்ந்து போற்றுவோம். நிற்க.,

இத்தகு அருமைமிகு அன்னைத் தமிழாம் அருந்தமிழின் மேம்பாட்டுக்காக இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற அகராதிப் பணி மற்றும் கலைச்சொல்லாக்கப் பணி உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "பெரிய ஐரோப்பாவில் வழங்கும் மொழிகள்" என்னும் கட்டுரையும், புலவர் வெற்றியழகன் அவர்களின் "உயிர்க்கு முன்னும்! உயிர்மெய்க்கு முன்னும்" என்னும் கட்டுரையும், அமெரிக்கா, நியூசெர்சி மருந்தியல் ஆராய்ச்சித்துறை துணைப்பேராசிரியர் மருத்துவர் யோசெப்பூட் அவர்களின், "Thamizh Science Lexicon : The Why and How" என்னும் ஆங்கிலக் கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும் என்உள்ளார்ந்தநன்றியைஉரித்தாக்குகிறேன்.

தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அன்பு நன்றி.

தமிழால் இணைவோம்...
செயலால் பேசுவோம்...

# பெரிய ஐரோப்பாவில் வழங்கும் மொழிகள்



அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம், பாரிசு



கிரேக்கத் தொல்கதையின் படி, போனிசியாவின் – Phoenicia நாட்டின் அரசர் Agenor இன் செல்வமகள் Europe – யூரோப்எ பெரிய காந்தவிழிகளை உடைய பேரழகி. இவள் ஒரு நாள் ஸிடோன் கடற்கரையில் தோழிகளுடன் விளையாடிக்கொண்டிருந்தாள். யூரோப்எயின் பேரழகைக் கேள்விப்பட்டிருந்த கிரேக்கக் கடவுள்களின் அரசரான Zeus – ஜெஎயுஸ் தன்னை ஓர் அழகான எருதுவாக மாற்றி இளவரசியருகே வந்தார். அழகான வெள்ளை எருதைக் கண்ட அவளும் அதை வருடி அதன் மேல் ஏறி அமர்ந்தாள். தன்மீது அமர்ந்த யூரோப்எயை ஜெஎயுஸ் கவர்ந்து கடத்திச் சென்று Crete – கிறெற் தீவிற்குள் கொண்டு சென்று மனைவிகளில் ஒருவராக்கிக் கொண்டார். பெரிய காந்த விழிகளையுடைய போனி சிய இளவரசியினன் பெயர் தான் யூரோப்எ. இப்பெயர்தான் ஐரோப்பா என வந்தது.

கிரீஸ் நாட்டு இரண்டு யூரோ நாணயம்




Europe எருது மீது..

## ஐரோப்பிய ஒன்றியத்து மொழிகளில் வணக்கங்கள் ...

| | | | |
|---|---|---|---|
| - ஆங்கிலம் | - Good morning | - பிரெஞ்சு | - Bonjour |
| - இத்தாலியம் | - Buongiorno | - போர்த்துக்கேயம் | - Bom dia |
| - இஸ்பானியம் | - Buenos dias | - போலந்து | - Dzien dobry |
| - எஸ்தோனியம் | - Tere hommikust | - மோல்டா | - L- Ghodwa t Tajba |
| - ஹங்கேரியம் | - Jo reggelt | - லற்வியம் | - Labrit |
| - கிரீஸ் | - Kalimera | - லித்துவேனியம் | - Labas Rytas |
| - சுவீடியம் | - God morgon | - ஸ்லோவாக்கியம் | - Dobré rano |
| - செக் | - Dobre rano | - ஸ்லோவேனியம் | - Dobro jutro |
| - டேனிஷியம் | - God morgen | - ஜேர்மன் | - Guter morgen |
| - டச்சு | - Goede morgen | - பின்னிஷியம் | - Hyvaa huomenta |

### ஐரோப்பா எங்கே தொடங்கி எங்கே முடிகிறது...

ஐரோப்பா எனும் சொல், பழைய கண்டம் என அழைக்கப்படும் ஐரோப்பாக் கண்டத்தைக் குறிக்கிறது. ஆயினும் ஐரோப்பா என்பதற்கான ஒரு வரையறையை இலகுவாகக் கூறிவிட முடியாது. ஐரோப்பா என்பதனை நில எல்லைகளை வைத்தோ அல்லது மக்களைக் கொண்டோ அல்லது அரசியலைக் கருதியோ அல்லது மொழிகளை எண்ணியோ வரைவிலக்கணம் கொடுத்துவிடுவது கடினம் ஆன விடயம். ஐரோப்பாவில் வழங்கும் மொழிகள் எவை என்பதைக் கூறப் புகுமுன், ஐரோப்பா எங்கே தொடங்கி எங்கே முடிகிறது என்பதனை அறிந்து கொள்வது முக்கியம்.

ஐரோப்பா அமெரிக்காவுக்கும் ஆசியாவுக்கும் இடையில் அமைந்திருக்கிறது. இது வடக்கே ஆர்க்ரிக் பனிப்பாறைச் சமுத்திரத்தையும், மேற்கே அத்லாந்திக் சமுத்திரம் ஐஸ்லான்ட் தீவையும், தெற்கே மத்திய தரைக்கடலையும் கிழக்கே ஆசியாவையும் சூழ உள்ள புவியியற் பகுதி ஆகும். உண்மையில் அத்லாந்திக்கில் இருந்து ஊறல் வரைக்குமான பிரதேசம். ஆதலினால் தான் பெரிய ஐரோப்பா என அழைக்கப்படுகிறது இப்பிரதேசப் பகுதியில் ஒரு நூறு மொழிகள் இருக்கின்றன. பேசுவோர்களின் எண்ணிக்கை அடிப்படையில் 90 மொழிகளைக் குறிப்பிடலாம். இம்மொழிகள் வழங்கப்படும் நாடுகளைப் பொறுத்துத் தேசிய மொழிகள், பிரதான மொழிகள், அலுவலகமொழிகள், பெரும்பான்மை மொழிகள், சிறுபான்மை மொழிகள் என்றெல்லாம் பெயர் கொள்கின்றன.

| ஐரோப்பா | | |
|---|---|---|
| பரப்பளவு | : | 10 392 855 km2 |
| சனத்தொகை | : | 737 803 861 மக்கள் |
| நாடுகள் | : | 51 |
| பிரதான மொழிகள் | : | 50 - 60 |
| சிறுபான்மை மொழிகள் | : | சற்றொப்ப 75 |
| மொழிக் குடும்பங்கள் | : | ஆறு |

| மொழிகள் | பேசப்படும் நாடுகள் |
|---|---|
| Albanian | Albania, Kosovo, Macedonia, Serbia, Italy, Turkey, Bulgaria, Greece |
| Basque | Spain, France |
| Belarusian | Belarus, Lithuania, Latvia, Poland, Russia, Ukraine, Estonia |
| Bosnian | Bosnia, Austria, Italy, Hungary, Romania, Sweden, Germany |
| Bulgarian | Bulgaria, Serbia, Moldova, Greece, Romania, Ukraine, Turkey |
| Catalan | Spain, Andorra, France, Italy |
| Croatian | Croatia, Austria, Bosnia, Italy, Hungary, Romania, Sweden, Germany |
| Czech | Czech Republic, Slovakia, Poland, Croatia, Austria, Ukraine |
| Danish | Denmark, Faroe Islands, Greenland, Germany |
| Dutch | Netherlands, Belgium, France |
| English | United Kingdom, Ireland, Gibraltar, Malta |
| Estonian | Estonia, Latvia, Russia, Sweden |
| Finnish | Finland, Russia, Sweden, Norway |
| Flemish | Belgium, Netherlands, France |
| French | Andorra, France, Monaco, Luxembourg, Belgium, Switzerland, Italy |
| German | Germany, Austria, Switzerland, Liechtenstein, Luxembourg, France, Belgium, Netherlands, Denmark, Italy, Poland, Czech Republic, Slovakia, Hungary, Romania, Russia |
| Greek | Greece, Cyprus, UK, Germany, Albania, Italy, Turkey |
| Hungarian | Hungary, Romania, Slovakia, Serbia, Ukraine, Austria, Slovenia |
| Icelandic | Iceland |
| Irish | Ireland, UK |
| Halian | |
| | Italy, San Marino, Vatican City, Switzerland, Malta, Monaco, Slovenia, Croatia |
| Latvian | Latvia, Russia, Belarus, Estonia, Sweden, Ukraine |
| Lithuanian | Lithuania, Russia, Latvia, Poland, UK, Belarus, Germany, Estonia, Sweden |
| | Luxembourg |
| Luxembourgish | Macedonia, Greece, Bulgaria, Albania, Serbia |
| Macedonian | Malta |
| Maltese | Moldova, Romania |
| Moldovan | Norway, Denmark, Sweden |
| Norwegian | Poland, Belarus, Ukraine, UK, France, Germany, Czech Republic, Slovakia, |
| Polish | Lithuania, Latvia, Russia, Hungary |
| Portuguese | Portugal, Spain, UK, France, Germany |
| Romanian | Romania, Moldova, Ukraine, Hungary, Bulgaria, Greece |
| Russian | Russia, Estonia, Latvia, Lithuania, Belarus, Hungary, Moldova, Ukraine, Romania, Bulgaria |
| ottish Gaelic | United Kingdom |
| Serbian | Serbia, Austria, Bosnia, Italy, Hungary, Romania, Sweden, Germany |
| Slovak | Slovakia, Serbia, Hungary, Poland, Romania, Ukraine |
| Slovene | Slovenia, Austria, Italy, Hungary, Serbia |
| Spanish | Spain, Andorra, UK, France, Germany |
| Swedish | Sweden, Finland |
| Turkish | Turkey, Cyprus, Bulgaria, Greece, Macedonia, Albania, Serbia, Bosnia, Croatia, Germany, Romania |
| Ukrainian | Ukraine, Belarus, Poland, Estonia, Latvia, Lithuania, Russia |
| Welsh | United Kingdom |



## 1 மில்லியன் பேரால் அல்லது அதற்கு மேலும் பேசப்படும் பெரும்பான்மை மொழிகள்

| | மொழி | தொகை - (மில்லியன்) | | மொழி | தொகை - (மில்லியன்) |
|---|---|---|---|---|---|
| 01 | ரஷ்யம் | 130 | 21 | ஜோர்ஜியன் | 5.5 |
| 02 | ஜெர்மன் | 100 | 22 | டெனிஷியம் | 5 |
| 03 | பிரெஞ்சு | 63 | 23 | ஃபின்னியம் | 5 |
| 04 | ஆங்கிலம் | 62 | 24 | ஸ்லோவாக்கியம் | 5 |
| 05 | இத்தாலியம் | 60 | 25 | அல்பேனியம் | 5 |
| 06 | உக்ரேனியம் | 55 | 26 | கஜன் ததார் | 5 |
| | துருக்கியர் | 55 | 27 | ஆர்மேனியம் | 4.5 |
| 07 | போலந்து | 42 | 28 | நோர்வேஜியம் | 4 |
| 08 | இஸ்பானியம் | 40 | 29 | லித்துவானியம் | 3.8 |
| 09 | ரூமானியம் | 24 | 30 | ஸ்லோவேனியம் | 2 |
| 10 | டச்சு | 21 | 31 | மசிடோனியம் | 2 |
| 11 | செர்போ- குரோசியம் | 18 | 32 | கலிசியோ | 2 |
| 12 | ஹங்கேரியம் | 14.5 | 33 | லற்வியம் | 2 |
| 13 | போர்த்துக்கேயம் | 11 | 34 | சுவாஷ் | 1.5 |
| 14 | கிரேக்கம் | 11 | 35 | சார்ட் | 1.4 |
| 15 | சுவீடியம் | 11 | 36 | எஸ்தோனியம் | 1.2 |
| 16 | செக் | 10.5 | 37 | ஜூரிஷ் | 1 |
| 17 | பிலெமிஷ்றாப்டஸ் | 10 | 38 | பாஸ்க் | 1 |
| 18 | கற்றலன் | 10 | 39 | மோர்ட்வே ஏர்ஷியா | 1 |
| 19 | பல்கேரியம் | 9 | 40 | மோர்ட்வே மொக்ஷா | 1 |
| 20 | ஆஸெரி | 8 | | | |

## 1 மில்லியன் பேருக்குக் குறைந்தவரால் பேசப்படும் சிறுபான்மை மொழிகள்

| மொழி | தொகை - மில்லியன் | | மொழி | தொகை - மில்லியன் |
|---|---|---|---|---|
| வலொன் | 800 000 | 24 | அப்காஷ் | 5120 00 |
| உட்முர்த் | 700 00 | 25 | இன்குஷ் | 100 00 |
| பஷ்கிர் | 700 00 | 26 | தலிஷ் | 100 00 |
| செச்சென் | 600 00 | 27 | கல்மிக் | 100 00 |
| பிறெற்றொன் | 600 00 | 28 | கறாச்சை | 100 00 |
| ஃபிறிட்லான் | 500 00 | 29 | கருபே | 100 00 |
| அருமேனியன் | 500 00 | 30 | சொறாபே | 100 00 |
| மறி | 500 00 | 31 | கஸ்- ஸ்கொட்லாந்து | 80 00 |
| ஃபிறிசொன் | 500 00 | 32 | லடினான் | 70 00 |
| கலுமா | 500 00 | 33 | கலிசியே | 50 00 |
| ஓஸெத்து | 450 00 | 34 | குறொன்லாண். | 50 00 |
| ஐஸ்லாண். | 350 00 | 35 | பல்கார் | 50 00 |
| மின்கிறெலியன் | 350 00 | 36 | நொகை | 50 00 |
| கொமி | 350 00 | 37 | கரபாக் | 50 00 |
| மோல்டிஷ் | 350 00 | 38 | ரூமான்ஷ் | 45 00 |
| அவார் | 350 00 | 39 | ஃபெரொனஸ் | 40 00 |
| அடிகேன் | 250 00 | 40 | டடீ | 30 00 |
| கோமி பெர்மியாக் | 200 00 | 41 | சாமி | 25 00 |
| கோர்ஸ | 200 00 | 42 | ஜேர்னெற்ஸ் | 25 00 |
| டார்ஜின் | 200 00 | 43 | தாத் | 20 00 |
| லாக் | 150 00 | 46 | லிவு | 20 00 |
| ககாவுஷ் | 150 00 | | ஸ்வான் | 20 00 |
| கமிக் | 130 00 | | மான்ஷ் | 6 00 |
| கபார்ட் | 120 00 | | | |

### ஐரோப்பாவில் மொழிக் குடும்பங்கள்

ஐரோப்பாவில் வழங்கப்படும் மொழிகளை மொழிக்குடும்ப அடிப்படையில், பாகுபாடு செய்யும் போது ஆறு மொழிக் குடும்பங்களில் அடக்கலாம்.

மொழிக் குடும்பங்கள்: ஆறு

1. இந்தோ– ஐரோப்பியக் குடும்பம்
2. ஃபினோ – உகாரியென் குடும்பம்
3.அல்டெய்க் குடும்பம்
4. பாஸ்க் – கோகாசியென் குடும்பம்
5. செமிட்டக் குடும்பம் – மோல்டிஷ்
6. குறோன்லான்ட் அல்லது கல்அலிஸ/ட் (இனுக்ருட்)

A). இந்தோ – ஐரோப்பியக் குடும்பம்

இந்தோ – ஐரோப்பியக் குடும்பத்தில்,ரோமானியக்( இலத்தீன்) குடும்பம், ஜெர்மனியக் குடும்பம், ஸ்லாவியக் குடும்பம், பால்ரிக் – ஸ்லாவியக் குடும்பம், கிரேக்கக் குடும்பம், செல்திய(கெல்திய)க் குடும்பம், த்ராக்கொ – இல்லிறியென் குடும்பம், இந்தோ – ஈரானியக் குடும்பம் என ஏழு, உப மொழிக் குடும்பங்கள் உண்டு.

a). ரோமானியக் (இலத்தீன்) குடும்பம்

இக்குடும்பத்தில் பிரதான மொழிகளாக பிரெஞ்சு (63 மில்லியன்), இத்தாலியம்(60 மில்லியன்), இஸ்பானியம் (40 மில்லியன்), றூமேனியன் (24 மில்லியன்), போர்த்துக்கேயம்(11 மில்லியன்), கத்தலன் (10 மில்லியன்) ஆகியன பிரதான மொழிகளாக அமைகின்றன. மேலும், கலிசியென், வலொான், கோர்ஸ், சார்ட்,ஒச்சிதன் புரோவென்ஸால் ஆகியனவும் அடங்குகின்றன.

இக்குடும்பத்து மொழிகளான பிரெஞ்சு, இஸ்பானியம், போர்த்துக்கேயம் ஆகியன பிற கண்டத்து மொழிகளாகுப் பரவியிருக்கின்றன.

b). ஜெர்மனியக் குடும்பம்

இக்குடும்பத்தில் பிரதான மொழிகளாக ஜேர்மன் (100 மில்லியன்), ஆங்கிலம் (62 மில்லியன்), டச்சு (21 மில்லியன்), சுவீடியம், டேனிஷ், நோர்வேஜியன், ஐஸ்லான்டியம், லக்ஸம்பேர்க், ஃபிறி சொன் ஆகியன உள்ளன.

இக்குடும்ப மொழியான ஜிட்டிஷ் என்பது அணைந்து போனமொழி. இன்னொரு மொழியான ஆங்கிலம் உலகம் முழுவதும் பரவி உலகமொழியாக விளங்குகின்றது.

c). ஸ்லாவியக் குடும்பம்

இக்குடும்பத்தில் பிரதான மொழிகள் மூன்று கிளைகளாகப் பிரித்துப் பார்க்கப்படுகின்றன.

– கிழக்குக்கிளை:ரஷ்யம்(130மில்லியன்),உக்ரேனியன்(55மில்லியன்),பியெலெறுய்ஸ்.
– மேற்குக்கிளை : போலந்து மொழி (42 மில்லியன்), செக், ஸ்லோவாக்கியம்...
– மத்திய கிளை : சேர்பியம், குரோசியம், ஸ்லோவெனியம், பல்கேரியம், மசெடோனியன்.

d). பால்ரிக் – ஸ்லாவியக் குடும்பம்

இக்குடும்பத்தில் லித்துவானியம், லற்வியம் என இருமொழிகள் உள்ளன.

e). கிரேக்கக் குடும்பம்

இக்குடும்பத்தில் 11 மில்லியன் பேரால் பேசப்படும் மொழியாக கிரேக்கம் உள்ளது.

f). செல்திய(கெல்திய)க் குடும்பம்

இக்குடும்பத்தில், களல்க் – ஐரிஷ், கய்ட்லிக் – ஸ்கொட்லாந்தியம், கலுஆஸ் – சிம்றஎக், ப்றெ ஜொனெக் – பிறெற் ரொன், கேர்ன்வெக் – கோர்னிக் என ஐந்து மொழிகள் மூன்று கிளைகளாகப் பிரித்துப் பார்க்கப்படுகின்றன. பிரான்சில் பேசப்பட்ட மொழியான கோலுவா(ஸ்) என்பதும் இக்குடும்ப மொழி ஆகும்.

g) த்ராக்கொ – இல்லிறியென் குடும்பம்

இக்குடும்பத்தில், அல்பேனியன், ஆர்மீனியன் என இருமொழிகள் உள்ளன.

h) இந்தோ – ஈரானியக் குடும்பம்

இக்குடும்பத்தில், ஒஸ்ஸெற், குர்திஷ், தாத், தலிக், ஆகியன த்சிக்கான் மொழி களாக உள்ளன.

B). ஃபினோ – உகாரியென் குடும்பம்

ஃபினோ குடும்பத்தில் பிரதான மொழி ஹங்கேரியம். பிற மொழிகளாக ஃபின்னுஆஸ், எஸ்தொனியம், கரெலியென், லப்பொன் ஆகியனவும் அடங்குகின்றன.

– உகாரியென் குடும்பத்து மொழிகள் மான்ஸி, காந்தி. ஓலொனெற்ஸியென், வெப்ஸ், இங்றெ,லிவ் என்கிற மொழிகள் மறைந்து போகும் நிலையில் உள்ளன.

C). அல்டெய்க் குடும்பம்

a). துருக்கிய தாத்ர் குடும்பம்

அல்டெய்க் குடும்பத்தில் துருக்கிய – தாத்ர் குடும்பம், மொங்கோலிய குடும்பம் என இரு உப மொழிக்குடும்பங்கள் உள்ளன.

துருக்கிய–தாத்ர் குடும்பப் பிரதான மொழி துருக்கியம் (55 மில்லியன்). பிற மொழிகளாக அஜெரி, தத்தார், சுவாக், பக்கிர், கராச்செய், காகோஷ், கூமிக், நொகெய், கரப்பாக் ஆகியனவும் அடங்குகின்றன.

b) மொங்கோலிய குடும்பம்

மொங்கோலியக் குடும்பத்தில் கல்மிக் மொழி வல்கா பள்ளத்தாக்கில் பேசப்படும் மொழி.

D). பாஸ்க் – கோகாசியென் குடும்பம் – 'ஐரோப்பிய மொழிகள்' இந்தோ – ஐரோப்பிய மொழிகள் படையெடுக்க முன், ஐரோப்பாவில் பேசப்பட்டுவந்த மொழி எனும் பெயரை உடையது பாஸ்க் மொழி. கோக்கேசியன் குடும்பத்தில் குறிப்பிடக்கூடிய மொழியாக விளங்குவது ஜேர்ர்ஜியென் மொழி ஆகும்.

E). மோல்டிஷ் குடும்பம்

ஐரோப்பாவில் வழங்கப்படும் ஒரேயொரு செமிட்டிக் குடும்பத்து மொழி மோல்டிஷ். இது அராபியச்சொற்களைக் கொண்டு இலத்தீன் எழுத்துமுறையில் எழுதப்படும் மொழி.

F). குறோன்லான்ட் குடும்பம் – எஸ்கிமோ ஐரோப்பாவில் வழங்கப்படும் குறோன்லான்ட் – எஸ்கிமோக்களின் மொழி கல்அலிஸ/ட். (இனுக்ருட்)

ஐரோப்பாவில் உள்ள எழுத்துமுறை வடிவங்கள்:

ஐரோப்பாவில் உள்ள பல மொழிகளும் தமக்கே உரிய எழுத்துமுறை வடிவங்களால் எழுதப்படுகின்றன. பொதுவாக அநேக மொழிகள் இலத்தீன் எழுத்துகளாலேயே எழுதப் பட்டு வந்தாலும் சில மொழிகள் தமது மொழி எழுத்துமுறைகளையே பயன்படுத்துகின்றன. ஆங்கிலம் றுனிக் எழுத்து வடிவிலும், ஜேர்மன் கோதிக் எழுதப்பட்டு வந்தது 'ABCD தந்த பானிசிய எழுத்துகள்' என்ற கட்டுரையில் விபரமாகப் பார்க்கலாம். இப்பெரிய கண்டத்தில் வழங்கப்படும் மொழிகள் அவ்வவ் மொழிகளுக்குரிய மொழிக்குடும்பத்து எழுத்துமுறை வடிவங்கள் கையாளப்படுகினறன. இம்மொழிகள் ஏழு வகையான எழுத்துமுறை வடிவங்களைக் கொண்டிருக்கின்றன.

### ஐரோப்பாவில் உள்ள எழுத்துமுறை வடிவங்கள் : ஏழு

1. இலத்தீன் எழுத்துகள்
2. கிரேக்க எழுத்துகள்
3.சிறிலிக் எழுத்துகள்
4. கோதிக் எழுத்து வடிவங்கள்
5. ஓகாமிக் எழுத்துகள்
6. ஆர்மீனியன் எழுத்துகள்

ஐரோப்பிய மொழிகளில் அநேகமானவை இலத்தீன் எழுத்துகளால் எழுதப்படுகின்றன. உதாரணமாக ஆங்கிலம், பிரெஞ்சு, இஸ்பானியம், இத்தாலியம், ஜேர்மன், டச்சு போன்ற மொழிகள் இம்முறை எழுத்துவடிவங்களில் எழுத்துகளைக் கொண்டிருக்கின்றன; கிரேக்க எழுத்துகள் ஃபோனிசிய எழுத்துகளைத் தழுவி வடிவமைக்கப்பட்டவை. கிரேக்க எழுத்து வடிவங்களிலிருந்து இலத்தீன் எழுத்துகள் அமைக்கப்பட்டன. பாரம்பரிய கிரேக்க எழுத்துகளை அடிப்படையாக வைத்து, தற்கால கிரேக்க எழுத்துகள், இலத்தீன் எழுத்துகள், சிறிலிக் எழுத்துகள் ஆகியன அமைக்கப்பட்டன.

சிறிலிக் எழுத்துகள் மசெடெனியன் கத்தோலிக்கச் சாமியாரான Saint Cyrille என்பவராலும் அவரது சகோதரரான Methode என்வராலும் 842ஆம் ஆண்டுப்பகுதியில் பைபிளை கிரேக்கத்திலிருந்து மசெடெனியனுக்கு மொழிபெயர்க்க ஈடுபட்டதனால் உருவாக்கப்பட்டவை. இவ்வகை எழுத்துகள் மசெடெனியா, பல்கேரியா, சேர்பியா, ரஷ்யா, உக்ரேனி யன், பியெலுறூஸ் ஆகிய நாடுகளில் கையாளப்படுகின்றது. சிறிலிக் எழுத்துகள் கிளக்கொலிஸ்தா – glagolista எழுத்துகளிலிருந்து தழுவப்பட்டவை.

கோதிக் எழுத்துகள் பதின்மூன்றாம் நூற்றாண்டில் மதகுருமார்களால் பயன்படுத்தப்பட்டு பின்னர் Gutenberg குத்தென்பேர்க்கால் அச்சுவேலைகளுக்கு ஆளப்பட்டது. இவ்வளர் எழுத்துகள் ஜேர்மனி, ஆஸ்திரியா, சுவிஸ் நாடுகளின் பாடசாலைகளில் கற்பிக்கப்பட்ட ஐரோப்பிய ஒன்றிய உருவாக்கம் காரணமாக 1945இல் கோதிக் எழுத்து முறை கைவிடப்பட்டது. ஓகாமிக் எழுத்துகள் அயர்லாந்து, ஸ்கொட்லாந்து, ஸெற்லாந்து தீவுகள், வேல்ஸ் இங்கிலாந்து ஆகிய நாடுகளில் வழங்கப்பட்ட வித்தியாசமான எழுத்துகள். ஸ்கன்டினே நாடுகளில் மூன்றாம் நூற்றாண்டு தொடக்கம் பதினெட்டாம் நூற்றாண்டுவரை வழங்கப்படு எழுத்து றூய்னிக் – runic எழுத்துகள்.

### ஐரோப்பிய மொழிகளின் உறவுகள்

ஐரோப்பாவில் உள்ள மொழிகளுக்கிடையிலான உறவுகள் எழுத்துகள், சொற்கள்

இலக்கணம் ஆகியவற்றில் நெருங்கிய தோற்றத்தை உடையன. எழுத்துகள் அடிப்படையில் கிரேக்க எழுத்து வடிங்களைத் தழுவியே அமைந்துள்ளன. சொற்களும் முகச்சாயல் உடைய னவாகவே காணப்படுகின்றன. ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களிடையே ஒற்றுமை வேற்றுமை காணப்படுவது போன்றே இம்மொழிகளுக்கிடையே ஒற்றுமை வேற்றுமைகள் நிலவுகின்றன.

இம்மொழிகள் ஒரே மூதாதையிலிருந்து தோன்றினவையாக இருக்கவேண்டும் என மொழியியலாளர்கள் கருதுகின்றனர்.

ஆப்பிள் என்ற பழம் பல ஐரோப்பிய மொழிகளில் ஒரே மாதிரியாக அழைக்கப் படுகின்றது. இப்பழம் முற்காலத்தில் இத்தாலியாவின் நேப்பிள் சுற்றுவட்டாரப் பகுதியான ஆபெல்லாAbella நகரத்திலிருந்து கிடைத்தது. இப்பழம் பிரெஞ்சில் பொம் – Pomme எனப் பெயர் கொண்டுள்ளது. ஏனெனில் இப்பழம் கொடைகளின் இறைவியான பொமொனால் – Pomone மனிதர்களுக்கு அளிக்கப்பட்டது என கோலோ – ரோமானியர் நம்பி, அப்பெண் கடவுளின் பெயரையே இப்பழத்திற்குச் சூட்டினர்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| - ஆங்கிலம் | : apple | - ஜேர்மன் | : Apfel | - டச்சு | : appel |
| - சுவீடியம் | : äpple | - டேனிஷ் | : æble | - நோர்வேஜியன் | : eple |
| - பிரெற்றோன் | : aval | - [illegible] | : afal | - ஐஸ்லாந்தியம் | : epli |
| - ரஷ்யம் | : yabloko | - உக்ரேனியம் | : yabluko | - போலந்து மொழி | : jablko |
| - ஸ்லோவேனியம் | : jabolko | - லத்வியம் | : abols | - பல்கேரியம் | : yabelka |

## இலத்தீனிய மொழிச்சொற்கள் – ஒப்பீடு

| இலத்தீன் | பிரெஞ்சு | ஸ்பானியம் | இத்தாலியம் | போர்த்துக்கேயம் | கற்றலான் | எஸ்பெரான்டோ | தமிழ் |
|---|---|---|---|---|---|---|---|
| sal | sel | sal | sale | sal | sal | salo | உப்பு |
| panis | pain | pan | pane | pão | pa | pao | பாண்,ரொட்டி |
| manus | main | mano | mano | mão | mà | mano | கை |
| aqua | eau | agua | acqua | aqua | aigua | ap? | தண்ணீர் |
| mel | miel | miel | miele | mel | mel | mielo | தேன் |
| thea | thé | té | tè | cha | te | teo | தேநீர் |
| familia | famille | familia | famiglia | fam?lia | fam?lia | familio | குடும்பம் |
| pater | père | padre | padre | pai | pare | patro | தந்தை |
| mater | mère | madre | madre | mãe | mare | patrino | தாய் |
| terra | terre | tierra | terra | terra | terra | tero | பூமி,தரை |
| animal | animal | animal | animale | animal | animal | animal | மிருகம் |
| mare | mer | mar | mare | mar | mar | maro | கடல் |
| luna | lune | luna | luna | lua | lluna | luno | சந்திரன் |
| magnus | grand | grande | grande | grande | gran | granda | பெரிய |
| lingua | langue | lengua | lingua | lingua | llengua | lango | நாக்கு |
| schola | école | escuela | scuola | escola | escola | ?kolo | பாடசாலை |
| liber | livre | libro | libro | livro | llibre | libro | புத்தகம் |

## ஜெர்மனிய மொழிச்சொற்கள் – ஒப்பீடு

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | (ego) sum | I am | Ich bin | Ik ben | Jag är | Jeg er | Jeg er | Je suis | (yo) soy |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] olen | [illegible] | [illegible] | [illegible] |


**உதவிய நூல்கள்:**

- Georges Kersaudy. Langues sans frontiers. Autrement 2001.
- Miguel Siguan. L' Europe des mangues. Sh Mardaga. 1996.
- L'Europe. - Nathan
  Jean-Pierre Chevalier, Monique Flonneau, régine Gérard.


# சொல்லும் பொருளும்




திருக்குறள்மணி – புலவர் இறைக்குருவனார்


உழவுத் தொடர்பான சொற்களை எடுத்து ஆராய்வோமானால் அவற்றில் பொதிந்து கிடக்கும் வரலாற்று உண்மைகள் வெளிப்படும்.

**செய்தல்** என்பது எல்லா வினைகளுக்கும் பொதுவான சொல். ஒருவனை நோக்கி நீ என்ன செய்கிறாய் என்றால், அவன் படிக்கிறேன், எழுதுகிறேன், கடைக்குப் போகிறேன், கணிப்பொறி இயக்குகிறேன் என்று எந்தச் செயலையும் விடையாகச் சொல்லலாம். ஆகவேதான் செய்தலைப் பொதுவினை என்கிறோம்.

இச் செய்தல் என்ற சொல் பண்டைக் காலத்தில் பயிர்த் தொழிலுக்கு ஏற்றவாறு நிலத்தைத் திருத்தம் செய்தலையே குறிக்கும் சிறப்பு வினையாக வழங்கப்பட்டு வந்திருக்கிறது. செய்யப்பட்ட இடந்தான் **செய்**, அதாவது **வயல்**. இதனை நன்செய், புன்செய் என்பவற்றில் தெளிவாகக் காணலாம்.

**உழுதல்** என்னுஞ்சொல்லுக்கு நிலத்தைத் துளைத்தல்–கிழித்தல் என்று பொருள். உளு என்பது துளைத்தற் கருத்து வேர்ச்சொல்.

மரம் பூச்சியால் துளைக்கப்படுவதை உளுவடித்தல் என்பார்கள். உளு என்னுஞ் சொல் உழு எனத் திரிந்து நிலத்தை மேனோக்காகத் துளைத்துச் செல்லுதலைக் குறிக்கிறது என்பது மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் கருத்து. உழு > உழுவு > உழவு.

**ஏர்** என்பது ஏர்தல் – உழுதல் என்னும் பொருளது. கிளைத்தல், கிழித்தல், கீறுதல், வகிர்தல் எனப் பொருள்படும் ஈர் என்னுஞ் சொல்லே – சீலை – சேலை என்பது போலவும் தீம் – தேம் (தீங்கனி – தேங்கனி) என்பது போலவும் ஈர் – ஏர் எனத் திரிந்துள்ளது.

ஏர் என்பது ஏரல் எனத்திரிந்து நத்தை இனத்தைச் சேர்ந்த கிளிஞ்சிலைக் குறிக்கிறது. ஏரல் ஊரும்போது நிலத்தை ஈர்ந்து செல்லுகின்றமையாலேதான் ஏரல். அப்பெயர் பெற்றுள்ளது. ஈர் > ஏர்>

உழவைக் குறிக்கும் ஏர் என்னும் சொல் அதற்குரிய கருவியின் பெயராகப் பெருவழக்குப் பெற்றுள்ளது. **மேழி, வாட்கட்டை, ஏர்க்கால், நுகத்தடி** எல்லாம் சேர்ந்த கருவிதான் ஏர்.

**கலப்பை** என்பது ஏரைக் குறிக்கும் மற்றொரு சொல். நிலத்தைக் கல்லுவது கலப்பை.

**பாண்டியம்** என்பது வேளாண்மையைக் குறிக்கும் வேறொரு சொல். பாண்டி என்பது காளை. நுகத்தடியில் காளையைப் பூட்டிச் செய்யப்படும் உழவு பாண்டியம் எனப்பட்டது.

**தொண்டு** என்னுஞ் சொல் தொள் என்னும் வேர்ச் சொல்லின் திரிபு. தொள் > தொடு–தோண்டு எனப் பயிர்த்தொழிலுக்குரிய அடிப்படை வேலைகளையே குறித்து, நாளடைவில் செயல் என்னும் பொதுப் பொருளைப் பெற்றுப் பின்னர்க் கைம்மாறு கருதாது விரும்பிச் செய்யும் நற்பணியைக் குறிப்பதாக நிலை பெற்றுள்ளது.

**விளை** என்பது விளைவிக்கப்படும் இடமாகிய வயல். அதனை விளை என்பது நாஞ்சில் நாட்டு வழக்கு. நாளடைவில் அது விளையைக் கொண்ட ஊரையும் குறிக்கக் காண்கிறோம்.

**களம்** என்பது கூடுமிடம். உழவர்கள் ஒன்றுகூடி வேலைசெய்யும் இடம் களம் எனப்பட்டது. வீரர்கள் கூடிப் போர் செய்யும் இடமும் களந்தான். முன்னையது ஏர்க்களம்; பின்னையது போர்க்களம்.

**கழனி** என்பது களம் என்பதன் திரிபுதான்.(களம்–களன் (களனி) கழனி) அது ஏர்க்களத்தையே குறிக்கும்.

**தொழில்** என்பது துளைத்தல் என்னும் பொருளுடைய துள் – தொள் என்பதன் திரிபாகவே அமைந்துள்ளது. பயிரிடுவதற்காக நிலத்தை உழுவதே தொழில் எனப்பட்டு நாளடைவில் அது பொதுச் சொல்லாகிவிட்டது.

நன்றி : தமிழாரம்–க (நூற் கோவை–2)

> உழுவார் உலகத்தார்க் காணியஃ தற்றா
> தெழுவாரை எல்லாம் பொறுத்து
>
> குறள். 1032

# உயிர்க்கு முன்னும்! உயிர்மெய்க்கு முன்னும்!

**புலவர் வெற்றியழகன்**

தலைவர், தொல்காப்பியர் தமிழ்ச் சங்கம், சென்னை



### முன்னுரை

சொல்லாய்வு இப்பொழுது பல்வேறு நிலைகளில் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது.

ஒரு காலத்தில் சொல்லுக்குப் பொருள் மட்டுமே தேடினர். இப்பொழுது வேர்ச்சொல்லையும் தேடுகின்றனர். இந்த நிலையில் ஒன்று, இரண்டு, ஒரு, ஓர், இரு, ஈர், ஒடு, ஓடு, ஆன், ஆல் ஆகியவை – நின்ற சொல்லின் இறுதியில் விகுதியாக நிற்பவை.

ஒன்று – என்பது ஒரு, ஓர் என்றும், இரண்டு – என்பது இரு, ஈர் என்றும், மூன்றாம் வேற்றுமை உருபாகிய ஒடு,ஓடு; ஆன், ஆல் எவ்வாறு இயங்குகின்றன என்னும் சொல்லாய்வினை மேற்கொள்வதே இக்கட்டுரையினது நோக்கமாகும்.

### தொல்காப்பிய விதி

"முதலீ ரெண்ணின் ஒற்று ரகரமாகும்
உகரம் வருதல் ஆவயி னான"
(தொல்.எழு.438)

ஒன்று, இரண்டு எனபவற்றில் உள்ள ன், ண் ஆகிய இரு மெய்யும் நீங்கி, "ர்" – ஆகும் ; உகரம் வரும். அஃதாவது ஒன்று – ஒரு, ஓர் என்றும்; இரண்டு – இரு, ஈர் என்றும் மாறும் என்பதுவே தொல்காப்பியரின் கூற்று.

எப்பொழுது – ஒன்று நின்ற சொல்லாக இருந்து, வரும் சொல்லின் முதலெழுத்து உயிரெழுத்தாக இருக்குமானால், ஓர் என்றும்; உயிர்மெய்யெழுத்தாக இருக்குமானால் ஒரு என்றும் மாறிக்கொள்ளும்.

"முதலீ ரெண்ணின் முன்னுயிர் வருகாலைத்
தவலென மொழிப உகரக் கிளவி
முதனிலை நீடல் ஆவயி னான"
(தொல்.எழு.455)

ஒரு, இரு ஆகிய சொல்லினை அடுத்து உயிரெழுத்தினை முதலாவதாகக் கொண்ட சொல் வந்து புணருமானால், ஒரு, இரு என்பவற்றில் உள்ள உகரம் கெட்டு ஓர், இர் என நின்று முதலில் நின்ற ஒகரம் ஓகாரமாகவும் இகரம் ஈகாரமாகவும் நீளும். அஃதாவது, ஓர், ஈர் என மாற்றமடையும் – என்று விளக்கிய தொல்காப்பியர்,

"ஆயிரங் கிளவி வரூஉங் காலை
முதலீ ரெண்ணின் உகரங் கெடுமே"
(தொல்.எழு. 464)

என்று மேலும் தெளிவுறுத்துகின்றார்.

ஒரு, இரு என்னும் சொல்லுடன் உயிரெழுத்தினை முதலாவதாகக் கொண்ட ஆயிரம் என்னும் சொல் வந்து புணரும்பொழுது ஓர், இர் என்று உகரம் கெட்டு நிற்கும். அஃதாவது, ஓராயிரம், இராயிரம் என மாறுதலடையும் – என்று கூறிய தொல்காப்பியர் மேலும் விளக்குகின்றார்.

"முதனிலை நீடினும் மான மில்லை"
(தொல். எழு.465)

ஒர், இர் என்பன ஓர், ஈர் என்று நீண்டிடினுங் குற்றமில்லை; அஃதாவது ஓராயிரம், ஈராயிரம் என மாற்றமடைந்தாலும் அதிலொன்றுங் குற்றமில்லை என்கிறார்.

### விதி விலக்கு

இதுவரையில் விதியினைக் கூறிவந்த தொல்காப்பியர், விதிவிலக்கையும் எடுத்துக் கூறுகின்றார். அந்த விதிவிலக்கும் யா – ஒன்றனுக்கு மட்டுமே என்பதனை உணர்ந்துகொள்ளுதல் வேண்டும்.

"அதனிலை உயிர்க்கும் யாவரு காலையும்

முதனிலை ஒகரம் ஓவா கும்மே

ரகரத்து உகரம் துவரக் கெடுமே"

(தொல். எழு.479)

ஒன்று – என்பதனை – அடுத்து உயிர் வந்தாலும் – யா – என்னும் உயிர்மெய் வந்தாலும் – முதனிலை ஒகரம் நீண்டு ஓகாரமாகும். அஃதாவது ரு – விலுள்ள உகரம் கெட்டு ர் – ஆகும்.

எ.டு: ஓர் ஆமை ; ஓர் யாறு

ஓர் ஆடு, ஒரு கழுதை; என்பனவே சரியானவை. யா – வுக்கு மட்டும் – ஒரு யானை , ஓர் யானை என்று பயன்படுத்தலாம். காரணம், யா – உயிரெழுத்தினைப் போன்று கருதப்பெறுகின்றது ; வாயிலும் உயிர்போல ஒலிக்கின்றது.

அதனால்தான் – நாமும் – யானை, யாறு, யாடு, யாண்டு – என்பனவற்றை ஆனை, ஆறு, ஆடு, ஆண்டு என்று மாற்றி எழுதிக்கொண்டிருக்கிறோம்.

### ஆங்கிலத்திலும்

நம் செந்தமிழ் இலக்கண முறை ஆங்கிலத்திலும் கடைப்பிடிக்கப்பெறுகின்றது. ஆங்கிலத்திலும் உயிரெழுத்துக்கு முன்னதாக An – என்றும்; மெய்யெழுத்துக்கு முன்னதாக A– என்றும்; மெய்யெழுத்து உயிரெழுத்தினைப் போன்று ஒலித்திடினும் An– என்றும்; உயிரெழுத்து மெய்யெழுத்தினைப் போன்று ஒலித்திடினும் A– என்றும் அமைக்கின்றனர்.

தமிழில் ஓர் என்பதற்கு ஒப்பற்ற என்னும் பொருள் இருப்பதனைப் போன்று – ஆங்கிலத்திலும் Singular என்னும் சொல்லுக்கு ஒருமை என்பதனுடன், ஒப்பற்ற என்னும் பொருளும் இருப்பதாகக் கூறுகின்றனர்.

### திருக்குறளில் – ஒரு, இரு

மேலே காட்டியுள்ள தொல்காப்பிய விதிகள், திருக்குறளில் எவ்வாறு போற்றப்பெற்றுள்ளன என்பதனைக் காண்போம்.

"ஒறுத்தார்க்(கு) ஒருநாளை இன்பம்
பொறுத்தார்க்குப்

பொன்றுந் துணையும் புகழ்" (156)

நாளை – என்று நா – உயிர்மெய் வருவதனால் ஒரு என்று அமைத்துள்ளார்.

"இருவே றுலகத் தியற்கை திருவேறு

தெள்ளிய ராதலும் வேறு" (374)

வேறு – என்று வே – உயிர்மெய் வருவதனால் இரு – என்று அமைத்துள்ளார்.

### திருக்குறளில் ஓர்

"வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்

பாத்திப் படுப்பதோர் ஆறு" (465)

ஆறு – என்று உயிரெழுத்து வந்திருப்பதனால், ஓர் – என்று அமைத்துள்ளார்.

உயிர்க்கு முன்னால் ஓர் என்றும்; உயிர்மெய்க்கு முன்னால் ஒரு என்றும் அமைத்தவர் – உயிர்மெய்க்கு முன்னால் இரு என்று அமைத்தவர் – ஈர் என்று எங்குமே அமைக்கவில்லை; இரு, இரண்டு என்று மட்டுமே அமைத்துவிட்டார்.

### திருக்குறளில் – ஒருவுக்கு ஓர்

உயிர்க்கு முன்னால் – ஓர் என்றும் ; உயிர்மெய்க்கு முன்னால் ஒரு என்றும் சரியாகவே நூல் முழுதும் அமைத்த திருவள்ளுவர் ஏழே ஏழு குறள்களில் மட்டும் – ஒரு – என்று அமைய வேண்டியதற்கு மாற்றாக ஓர் – என்று பொருள் சிறப்பினைக் கருதி மாற்றி அமைத்துள்ளார். அதனால் ஒரு, ஓர் எங்குவேண்டுமானாலும் வரலாம் என்பது கருத்தில்லை; அது தவறான சிந்தனையாகும். மேற்குறித்த குறள்களில் ஒரு, ஓர் எங்கு வேண்டுமானாலும் அமையலாம் என்று கருதி அமைக்கவில்லை என்பதனைக் காண்போம்.

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்

வரனென்னும் வைப்பிற்கோர் வித்து"

(24)

வித்து – வி – உயிர்மெய் வந்திருப்பதனால் வைப்பிற்கொரு என்று அமைத்திருத்தல் வேண்டும்.

"வைப்பிற்கொரு" என்பது கனிச்சீர். கனிச்சீர் வெண்பாவில் வருதல் கூடாது என்பதனால், ஓர் – என்று மாற்றிக் காய்ச்சீர் ஆக்கிக் காய்முன் நேர் என்று சரிசெய்துள்ளார்.

"எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை

அதிர வருவதோர் நோய்" (429)

நோ – என்னும் உயிர்மெய் எழுத்துக்கு முன்னதாக "வருவதொரு" என்றுதான் அமைத்திருத்தல் வேண்டும். அவ்வாறு அமைத்திருந்தால் இலக்கணம் சரியாகியிருக்கும்; பொருள் சிறப்புற்றிருக்காது. நோய் – என்பது – உடம்பில் ஏற்படுகின்ற புண் இல்லை; மனத்துக்குள் ஏற்படுகின்ற துன்ப நிலை. துன்பம் – பண்புச்சொல்; பண்புச் சொல்லுக்கு எண்ணிக்கை கூறுதல் கூடாது. ஒரு – என்பதற்கு எண்ணிக்கைப் பொருள். அதுமட்டும் இல்லை. அதிர வருகின்ற துன்பம்; மிகச் சாதாரணமான துன்பமில்லை; மிகக் கொடிய துன்பம் என்னும் பொருள் வருதல் வேண்டும் என்பதனாலும் ஒரு என்பதனை ஓர் என்று மாற்றியமைத்துள்ளார். அதனை எவ்வாறு அறியலாம் என்றால், வருவதொரு – என்பது காய்ச்சீர்தான். காய்ச் சீர் முன் நேர் (நோய்) தாராளமாக அமையலாம். ஆனாலும் பொருள் சிறத்தல் வேண்டும் என்பதற்காகவே ஒரு–வைத் தூக்கிவிட்டு, ஓர் – என்று அமைத்து விளமுன் நேர் ஆக்கி, இலக்கணத்தையுங் காத்துள்ளார்.

"சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை

வெல்லுஞ்சொல் இன்மை யறிந்து" (645)

சொல் – என்று உயிர்மெய் இருப்பதனால், பிறிதொருசொல் என்றுதான் அமைத்திருத்தல் வேண்டும். ஒரு – என்று அமைத்திருந்தாலும் காய்ச்சீர்தான். காய் முன் நேர் அமைந்திருக்கும்; இலக்கணமும் சரியாகியிருக்கும். ஒரு – சொல்லை – வெல்லவேண்டுமானால், வெல்லவேண்டிய சொல் – மேலான – உயர்ந்த – ஒப்பற்ற சொல்லாக இருத்தல் வேண்டும். ஒப்பற்ற சொல் என்னும் பொருள் அமைதல் வேண்டுமானால், ஓர் – என்பதற்குதான் அப்பொருள் உண்டு. அதனால், ஒரு என்பதனைத் தூக்கி வீசி எறிந்துவிட்டு ஓர் என்னும் சொல்லைப் பொருள் சிறப்புக்காக அமைத்துள்ளார்.

"கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை

நீட்டி அளப்பதோர் கோல்" (796)

கோல் – என்று உயிர்மெய் வந்திருப்பதனால் காய்ச்சீரில் முடிதல் வேண்டும். அளப்பதொரு என்று அமைந்திருந்தாலும் காய்ச்சீர்தான். இருந்தாலும் – ஆராய்ந்து பார்க்கத் தக்க ஒரு கோல் என்னும் பொருள் அமைதல் வேண்டும் என்பதற்காகவே ஒரு என்பதனை ஓர் என்று மாற்றி அமைத்துள்ளார். உறுதி என்று உயிரெழுத்து வந்திருப்பதனால் உண்டாண்டோர் – என்று ஓர் – என்று அமைத்தவர் கோல் என்று வந்திருப்பதனால், ஒரு – என்று அமைக்கத் தெரியாதவரா திருவள்ளுவர்.

"ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்

போஒம் அளவுமோர் நோய்" (848)

இந்தக் குறளிலும் அளவுமொரு – என்று அமைத்திருந்தாலும் காய்ச்சீர்தான்; காய்முன் நேராக இலக்கணம் சரியாக இருக்கிறது. இருந்தாலும் – நோய் – என்பது துன்பம் என்னும் பண்புச் சொல் . எண்ணிக்கை கொள்ளுதல் கூடாது. அதுமட்டும் அன்று; சாதாரணத் துன்பம் அன்று; மிகக் கொடிய துன்பம் என்னும் பொருள் அமைதல் வேண்டும் என்பதற்காகவே ஒரு – என்பதனை ஓர் என்று மாற்றிக் கருவிளம் ஆக்கி விளமுன் நேர் என்று இலக்கணத்தையும் சரிசெய்துள்ளார்.

"பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்

நாணாக நாணுத் தரும்" (902)

பெரியதொரு – என்று அமைத்தால் காய்ச்சீராகிக் காய்முன் நேர் என்று இலக்கணம் சரியாகியிருக்கும். இங்கும் நாண் – நாணம் – பண்புச்சொல். அதனை ஒரு என்று எண்ணிக்கையில் கூறுதல் கூடாது என்றும் – பெரியதொரு நாணம்

என்றால் சாதாரண நாணம் ஆகிவிடும். அதனால் மிகப் பெரிய நாணம் என்னும் பொருள் அமைதல் வேண்டும் என்பதற்காகவே – பெரியதோர் என்று கருவிளம் ஆக்கி இலக்கணத்தையும் சரிசெய்துள்ளார்.

"ஊடலின் உண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொல் லென்று" (1307)

உண்டாங்கொரு என்று அமைத்தால் கனிச்சீராகி வெண்டளை தவறாகிப் போய்விடும். அதனாலும், துன்பம் – என்பது பண்புச்சொல். எண்ணிக்கையில் கூறுதல் கூடாது அதனாலும் – துன்பம் என்பது சாதாரணத் துன்பம் அன்று; மிகப் பெரிய துன்பம் என்னும் பொருள் அமைதல் வேண்டும் அதனாலும் ஒரு–வை நீக்கி ஓர் – என்று அமைத்துள்ளார்.

### தொல்காப்பியத்தில் ஒடு,ஓடு; ஆன், ஆல்

உயிர்க்கு முன்னர் ஓர் என்றும்; உயிர்மெய்க்கு முன்னர் ஒரு என்றும் அமைந்ததனைப் போன்றே – உயிர்க்கு முன்னால் ஓடு, ஆன், தோறு என்றும்; உயிர்மெய்க்கு முன்னால் ஒடு, ஆல், தொறு என்றும் தொல்காப்பியத்தில் அமைந்திருப்பதனைக் காண்போம். நூற்பாவழி அன்று; அவர் நடையில் கடைப்பிடித்திருக்கின்ற வழியில். மூன்றாம் வேற்றுமை உருபு ஒடு என்று வேற்றுமை இயலிலும்; ஆன் என்று வேற்றுமை மயங்கியலிலும் நூற்பாவழிக் காட்டியுள்ளார். ஒடு – உயர்ந்த பொருளுடன்தான் சேர்ந்துவருதல் வேண்டும் என்று நூற்பாவழிக் கூறியுள்ளார். ஆனால், ஒடு, ஆல், தொறு உயிர்மெய்க்கு முன்னால்தான் வருதல்வேண்டும்; ஓடு, ஆன், தோறு உயிர்க்கு முன்னால்தான் வருதல் வேண்டும் என்று எங்குமே நூற்பாவழி வற்புறுத்திக் கூறவில்லை; அவரது செய்யுள் நடையில் பயன்படுத்தி உணர்த்தியுள்ளார்.

மூன்றாம் வேற்றுமை உருபு ஒடு, ஆன் மட்டுமே தொல்காப்பியர் கூறினார். நன்னூலார்தாம் ஒடு உடன் ஓடு; ஆன் – உடன் ஆல் சேர்த்துக்கொண்டார். அவர்க்குப் பிறகு வந்த இலக்கணத்தார் உடன், கொண்டு என இரண்டனைச் சேர்த்துக்கொண்டனர்.

தொல்காப்பியர் ஒடு உருபு உயர்ந்த பொருளுடன்தான் சேர்ந்து வருதல் வேண்டும் என்று கூறியுள்ளார். எ.டு. : பூவொடு நார், ஆசானோடு மாணவன் இவ்வாறுதான் அமைதல் வேண்டும் என்று கூறியுள்ளார்.

### தொல்காப்பியர் உணர்த்தும் மூன்றாம் வேற்றுமை உருபுகள்

"மெய்யோ டியையினும் உயிரியல் திரியா" (தொல்.எழு.9)

இயையினும் என்று உயிர் வந்ததனால், மெய்யோடு என்று ஓடு – என்று அமைத்துள்ளார்.

"அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற்று அமைய நெறிப்பட நாடி" (தொல்.எழு.83)

உறுப்புற்று என்று உயிர் வருவதனால் – நிலையான் என்று – ஆன் – உருபினை அமைத்துள்ளார்.

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்" (தொல். எழு. 15)

நிலையல் என்று நி – உயிர்மெய் வந்திருப்பதனால், புள்ளியொடு என்று ஒடு – உருபினைப் பயன்படுத்தியுள்ளார்.

"வல்லெழுத்து மிகுதி சொல்லிய முறையால்
தம்மி னாகிய தொழிற்சொல் முன்வரின்" (தொல். எழு. 156)

தம்மின் என்று த – உயிர்மெய் வருவதனால், முறையால் என்று ஆல் – உருபினைப் பயன்படுத்தியுள்ளார்.

### திருக்குறளில் – தனியாக ஓடு, ஆன்

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை" (37)

ஊர்ந்தான் என்று உயிர் வந்ததனால், பொறுத்தானோடு என்று ஓடு – என்னும் உருபைப் பயன்படுத்தியுள்ளார்.

"இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாந் தலை" (47)

இல்வாழ்க்கை – என்று உயிர்

வந்திருப்பதனால், இயல்பினான் – என்று – ஆன் – என்னும் உருபைப் பயன்படுத்தியுள்ளார்.

### திருக்குறளில் – ஒடு, ஆல்

"மனத்தொடு வாய்மை மொழியின்
தவத்தொடு
தானம்செய் வாரின் தலை" (295)

வாய்மை – என்று – வா – உயிர்மெய் வந்திருப்பதனாலும் – தானம் செய்வாரின் என்று – தா – உயிர்மெய் வந்திருப்பதனாலும் மனத்தொடு – என்றும் – தவத்தொடு என்றும் ஒடு உருபினைப் பயன்படுத்தியுள்ளார்.

"ஒழுக்கம் உடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல்" (139)

சொலல் – என்று சொ – உயிர்மெய் வந்திருப்பதனால், வாயால் – என்று – ஆல் உருபினைப் பயன்படுத்தியுள்ளார்.

### ஒரே குறளில் – ஒடு, ஓடு

"விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்" (410)

மக்கள் என்று உயிர்மெய் வந்திருப்பதனால், ஒடு என்றும்; ஏனையவர் என்று உயிர் வந்திருப்பதனால், கற்றாரோடு என்று ஓடு – உருபினையும் பயன்படுத்தியுள்ளார். ஒடு, ஓடு என்பவற்றுக்குப் பொருள் ஒன்றுதான். ஆனாலும் உயிர்மெய்ம்முன் ஒடு என்றும்; உயிர்முன் ஓடு என்றும் பயன்படுத்தி நமக்கெல்லாம் இலக்கணப் பாடம் நடத்துகிறார் திருவள்ளுவர்.

### ஒரே குறளில் – ஆன், ஆல்

"புறந்தூய்மை நீரான் அமையும்
அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்" (298)

அமையும் – என்று – உயிர் வந்ததனால், நீரான் – என்று – ஆன் உருபினையும்; காணப்படும் என்று கா – உயிர்மெய் வந்ததனால் வாய்மையால் – என்று – ஆல் உருபினையும் ஒரே குறளில் பயன்படுத்திப் பாடம் புகட்டுகின்றார்.

### திருக்குறளில் – தொறு, தோறு – தனியாய்

"நவில்தொறு நூல்நயம் போலும்
பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு" (783)

நூல் நயம் – என்று உயிர்மெய் வந்திருப்பதனால், நவில்தொறும் என்றும்; பண்புடையாளர் என்று உயிர்மெய் வந்திருப்பதனால், பயில்தொறும் என்றும் தொறும் – என்று கடைப்பிடித்துள்ளார்.

"உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால்
பேதைக்கு
அமிழ்தினின் இயன்றன தோள்" (1105)

உயிர்தளிர்ப்ப என்று உயிர் வந்ததனால், உறுதோறு என்று தோறு – அமைத்துள்ளார்.

### ஒரே குறளில் – தொறு, தோறு

"களித்தொறுங் கள்ளுண்டல்
வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது" (1145)

கள்ளுண்டல் – என்று – க – உயிர்மெய் வந்ததனால் –தொறும் – என்றும்; இனிது –என்று உயிர் வந்ததனால், தோறும் – என்றும் ஒரே குறளில் இருவேறு நிலைகளையும் நமக்கு விளக்கிக் காட்டுவதற்கே பயன்படுத்தியுள்ளார்.

### திருக்குறளில் – அது, அஃது

அது, அஃது என்னும் சேய்மைச் சுட்டினை எங்குவேண்டுமானாலும் பயன்படுத்துதல் கூடாது. அஃது என்பதுதான் சொல்லே. உயிர் வருமானால் ஆய்தம் அப்படியே இருக்கும். அஃதாவது, அஃது என்றே இருக்கும்; உயிர்மெய் வருமானால், ஆய்தம் கெட்டுவிடும் – என்கிறார் தொல்காப்பியர். எ.டு. : அஃது ஆடு; அது கழுதை.

### திருவள்ளுவரைக் காண்போம்

"வீழ்நாள் படாஅமை நன்றாற்றின்
அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்" (38)

ஒருவன் – என்று உயிர் வந்ததனால், அஃது என்று – சுட்டை ஆய்தத்துடன் அப்படியே பன்படுத்தியுள்ளார்.

"அன்றறிவாம் என்னா தறஞ்செய்கமற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை" (36)

**பொன்றுங்கால்** – என்று – பொ – உயிர்மெய் வந்ததனால் , மற்று + அது என்று ஆய்தத்தை நீக்கி அது – என்று பயன்படுத்தியுள்ளார்.

## முடிவுரை

திருவள்ளுவர் – தொல்காப்பியரைக் காட்டிலும் மிகச் சிறந்த இலக்கணப் புலவர். அய்யம் ஏற்படும் போதெல்லாம் தொல்காப்பியத்தினைப் புரட்டுவதைவிட திருக்குறளைப் புரட்டலாம்; திருக்குறள் விடைசொல்லும்; விளக்கமளிக்கும். திருக்குறள் – அறநூல் – வாழ்வியல் நூல் மட்டுமில்லை; மிகப்பெரிய இலக்கண நூல். திருக்குறளில் எழுத்திலக்கணம்; சொல்லிலக்கணம்; பொருளிலக்கணம்; யாப்பிலக்கணம்; அணியிலக்கணம் ஆகிய அய்ந்திலக்கணமும் அடங்கியுள்ளன.

திருக்குறள் வழியும் – தொல்காப்பியம் வழியும் – நாம் தமிழ் இலக்கண அறிவினைப் பெறுவதற்கு இந்தச் சொல்லாய்வுக் கட்டுரை பெரிதும் பயன்படுமென்று கருதுகின்றேன்.

# நுண்பொருட் பாகுபாட்டுச் சொற்கள்

மொழிஞாயிறு **ஞா. தேவநேயப் பாவாணர்**

### நால்வகை இலை

சில பூண்டுகளிலும், செடிகொடிகளிலும், வாழை, மா, புளி முதலிய மரங்களிலும், கிளை நுனியிற் காம்புடன் தனித்தும் அடர்ந்தும் பெரும்பாலும் முட்டை வடிவில் மெல்லியதாயிருப்பது இலை.

புல்லிலும் நெல், வரகு போன்ற பயிர்களிலும், நுனியிலும் தண்டையொட்டியும் ஈட்டிபோல் ஒடுங்கி நீண்டு சுரசுரப்பாயிருப்பது தாள்.

கரும்பிலும், சோளம், நாணல் போன்ற பெருந்தட்டை களிலும், நுனியிலும் கணுவொட்டியும் பெருந்தாளாக ஓங்கி மடிந்து தொங்குவது தோகை.

தென்னை, பனை முதலியவற்றிற்போல், நுனியையும் அடியையும் ஒருங்கே ஒட்டியே தனித்தனி மட்டையோடு தோன்றி, விசிறி வடிவில் அல்லது தூவுவடிவில் முரடாயிருப்பது ஓலை.

### ஐவகை மலர்நிலை

தோன்றும் நிலை அரும்பு; மலரத் தொடங்கும் நிலை போது; மலர்ந்த நிலை மலர்; கீழே விழுந்த நிலை வீ: வாடிச் சிவந்த நிலை செம்மல்.

அரும்பு, மொட்டு, முகை, மொக்குள் என்பன, பருமன் பற்றிய வெவ்வேறு அரும்பு வகைகளைக் குறிப்பன.

### மூவகைக் காய்ப்பு நிலை

இளங்காய் பிஞ்சு; முதிர்ந்தது காய்; பழுத்தது பழம் அல்லது கனி.

சிலவகைப் பிஞ்சுகட்குச் சிறப்புப் பெயருமுள தென்னை, பனை முதலியவற்றின் பிஞ்சு குரும்பை; மாம்பிஞ்சு வடு; பலாப் பிஞ்சு மூசு; வாழைப்பிஞ்சு கச்சல்.

இங்ஙனமே நிலைத்திணையின் (தாவரத்தின்) எல்லாவுறுப்புகளையும், நுண்பாகுபாடு செய்து, வெவ்வேறு பெயரிட்டிருக்கின்றனர் பண்டைத் தமிழ்ப் பொதுமக்கள்.

நன்றி : பண்டைய தமிழ நாகரிகமும் பண்பாடும்

# Thamizh Science Lexicon: The Why and How

**Dr. Joseph Jude,**
Asst. Professor
Pharmacology & Toxicology,
Rutgers University, New Brunswick,
New Jersey, USA.



### Why do we need a Thamizh Science Lexicon?

Technical words are the vehicles of knowledge in a scientific field. More than ever, transfer of technical and scientific knowledge in native languages is of paramount importance. This necessity was better demonstrated by the public health crisis over the last two years of Covid–19 pandemic. A deluge of information on Covid–19 was generated and disseminated in English by the global health authorities, yet the critical information only trickled down to global communities through few information channels and often were not heeded as well as the "fake" chatter spread via social media. This "communication bottleneck" in science and technology remains a challenge for native language speakers. And a rare solution is at hand, through the impressive efforts by the Tamil Nadu Government in creating a productive alliance between Thamizh linguists and Science/Technology experts in Sorkuvai (சொற்குவை) Project to generate a comprehensive word corpus.

It is not that Thamizh (தமிழ்)is lacking inits own technical and scientific lexicon. Sidhdha Medicine, an ancestral gift from our Thamizh Sidhdhas, is rich with ancient medical nomenclature (i.e: mathumekham–மதுமேகம் for diabetes). However, the immense progress in science and technology originated from Europe in the nineteenth and twentieth centuries and was disseminated globally via English language. The English language, in turn, borrowed a vast majority of its scientific terms from Greek and Latin that historically were the language of science and philosophy. Thus, the Thamizh lexicon we aim to create in science and technology will be more practical if we align that with that of English.

### Where are we on Thamizh Science Lexicon?

In order to understand where we are – the Thamizh populace– in terms of Thamizh vocabulary in science and technology I turned to a haphazard web survey on Thamizh science literature on line. There are dozens of web–based Thamizh magazines and blogs covering life science and technology (the notable ones being Solvanam/சொல்வனம், and BBC Thamizh/பிபிசி தமிழ்). First, the vocabulary of majority of these online publications borrow science terminology directly from the original English, Greek or Latin original words. Understandably, the direct use of the original word in Thamizh articles is of practical value – it conveys the message without placing extra burden on the writer to create a new Thamizh word that the reader is not keen to understand. The second observation was that, whenever a Thamizh word is used, there is a lack of uniformity among various publications, often driven by its region of origin (i.e: India Vs Sri Lanka). The latter observation is the one that prompted me to pen this article on the ground rules of creating Thamizh words in science and technology to promote uniformity in our science lexicon. Please be reminded that my proposals are purely based on my expertise in life science and an ardent interest in communicating science in Thamizh language. Therefore, these proposals are not to be taken as criticisms of the existing Thamizh science lexicon and their creators.

### How to capture the meaning in a new Thamizh Scientific word?

This appears to be a simple question to linguists and etymologists, but becomes complicated when the words they seek to create falls outside their expertise. The science lexicon presents this challenge. A vast majority of words in science denotes two aspects: structure(உருவமைப்பு) and function (தொழில்பாடு). Therefore, a scientific word translated from another language should, as a minimum requirement, reflect the structure and function enshrined in the original word.

Structure:Let us focus on, as an example, the word "cell" to demonstrate the reflection of structure. There are currently two Thamizh words in common use to denote "cell". One is "uyir–anu–உயிரணு", the second "kalam–கலம்". The word uyirranu captures "life" and the microscopic nature of the "cell". This a reasonable reflection of the original word "cell". However, there are some drawbacks in the word uyiranu. The word "anu–அணு" also represents the English word "atom" – the constituent unitary particle that was previously thought to be indivisible. Now, atoms make all things live and innate. A "cell" is composed of millions of molecules and each molecule is made of billions or trillions of atoms. Therefore, both atom and cell are microscopic in terms of their size, but their actual sizes are at different orders of magnitude (an atomic radius is measured in picometer or 10–12 meter, a cell size is measured in micrometer or 10–6 meter, a million–fold difference in magnitude). The word "anu" is also partly used to describe "electron" (மின்னணு), one of the sub–atomic particles within the atom. The size of an electron is merely in femtometers (10–15 meter). Thus, the Thamizh word "anu", just reflecting the smallness or microscopic natures of an electron, atom and cell fails to capture the vast differences in the magnitudes between these three microscopic structures. Even if we choose to ignore the magnitude differences, the word anu is used to name three structures that are at distinct hierarchy in biology (electron, atom, cell, in ascending order of hierarchy).

On the other hand, the Thamizh word "kalam" presents a simple description of "cell" as it was originally observed by the first scientist who coined the term. Robert Hooke, an English philosopher and natural scientist, first observed the microscopic "cells" from plants in the 17th century. The honeycomb appearance he saw under his primitive light microscope reminded him of the chambers (celle in French, cell in English) the reclusive monks used to reside in European monasteries, so he named the structures "cells". It turns out that the word cell better reflects the structural aspects of a living cell: it has a boundary, it holds sub–cellular organelles and cytoplasm and has channels and pores that mediate transport across the boundary. There is no reflection of the magnitude of the structure in the word cell or "kalam". However, not reflecting the magnitude of the structure "kalam" or "cell" does not diminish the translingual meaning of the word, it rather preserves it.

Function: The other critical feature that needs to be preserved in translating scientific terms to Thamizh is the functional aspect. Let us take the English word "kinase" to demonstrate this aspect. In biological chemistry, kinases are the family of enzymes that transfer phosphate ions to amino acid residues on proteins: this process is called phosphorylation and usually activates or inactivates the protein's biological function. Since the origin of kinases is kinesis (Greek) or "movement", we might be tempted to capture that original meaning by the Thamizh word "iyakki–இயக்கி". However, since the kinases invariably transfer phosphate groups, I proposed the Thamizh translation "பொஸ்பேற்ஏற்றி" to reflect this singular function. The word "பொஸ்பேற்ஏற்றி" also makes it easier for a lay Thamizh science reader to understand another enzyme group in biochemistry: the phosphatases. Phosphatases are the counter–enzymes working to reverse the phosphorylation reactions catalyzed by kinases, thus phosphatases remove phosphate ions from the proteins. Now, one can easily name phosphatases as "பொஸ்பேற்நீக்கி" and comprehend the functions of the phosphatases.

## The phonetics in Thamizh science lexicon

It is my humble opinion that phonetic translation of words invariably fail to transfer the real meaning of the original words. It is true in any field of knowledge, but particularly phonetic translation can lead to gross misunderstandings in scientific lexicon. The word I would use as an example is the Thamizh word "அழற்சி" for inflammation. Inflammation is a pathological process characterized by 4 cardinal signs: heat, pain, redness and swelling. Biologically, these cardinal signs originate from something that injures/irritates our body. The word that better describes that appears to be "அழற்சி". It is true that this word only captures the cause (etiology) of inflammation, not the cardinal signs of inflammation. There is another word in English– "allergy" (root word allos – Greek, meaning "other") which means our body reacts to foreign ("other") substances in negative and unfavorable ways. The suitable Thamizh word that captures this meaning is "ஒவ்வாமை". Some confusion exists among

Thamizh lay science readers that they phonetically translate the "allergy" into "அழற்சி". Although allergy and inflammation are mechanistically related (inflammation results from allergy), it is critical that the meanings of these two processes are preserved when we translate to Thamizh.

## Regional Variations in Thamizh Science Lexicon

Thamizh is historically a mother tongue for millions of people in a dozen of countries. Arguably, the past contributions to Thamizh science lexicon have primarily been from India and Sri Lanka. When we compare some of the Thamizh scientific terms prevalent in these two countries, there are significant variations. For instance, the word "organic", is translated as "சேதன" in Sri Lankan Thamizh textbooks and articles (the antonym, "inorganic" is translated into "அசேதன"). In Indian publications, "organic" is mostly translated to "கரிம", perhaps to reflect the central role of carbon ("கரி") in organic compounds. Variations like these are not a serious concern as long as they reflect the structure/ function aspects of the original word. However, these variations need to be reviewed by experts in the appropriate fields of study if the original meaning is not reflected in these regional variants. For instance, as correctly pointed out by Dr. Kantharuban (Germany, Biohemistry and Transfusion Medicine Specialist) at the 65th Session, the blood vessel "vein–நாளம்" is sometimes erroneously translated into "நரம்பு" in some Thamizh publications (this is even listed in the word corpus, under misc. section). In fact, "நரம்பு" is the Thamizh word for nerve. Hopefully, such discrepancies will be rectified and resolved during the consultation process for the upcoming release of English–Thamizh Medical Dictionary.

## Concluding Remarks

There is an unmet need for a comprehensive effort to generate a Thamizh Science Lexicon to disseminate scientific knowledge for millions of lay Thamizh populace. It is critical that Thamizh linguists and experts in the field need to work cooperatively to complete such a historical achievement. To generate new scientific words in Thamizh, the minimum requirementis to accurately capture the structure and/orfunction in the original words, without phonetic considerations. Regional variations exist in the current Thamizh Science lexicon; however, they are not considered a hindrance to progress.

## குறுக்குச்சால் ஓட்டாதீர்

அண்மையில் ஒரு கட்டுரையில் 'நூற்கள்' என எழுதியிருக்கக் கண்டேன். காலின் பன்மை கால்கள்; வேலின் பன்மை வேல்கள். அது போல நூலின் பன்மை நூல்களாகத்தான் இருக்கமுடியுமே தவிர 'நூற்கள்' ஆக இயலாது. நூற்பொருள் நூற்கோவை என ஒலிப்பது சரியே. அப்பழக்கத்தால், வல்லின முதல் மொழியான கள் சேரும்போது நூற்கள் என்றுதானே வருமென விவாதிக்கலாம். அவ்வாறெனில் காற்கள், வேற்கள் எனப் பிறவற்றையும் மாற்றலாமா?கள் விகுதி சேரும்போது இயல்பாக இருப்பதே நலம். சால்களின் மீதே ஏர் ஓடவேண்டும். சாற்கள் ஆக்கிக் குறுக்குச்சால் ஓட்டக்கூடாது.

சால் என்பது உழுததடம். சால்மீதே பின்னே போகும் ஏர்களும் உழவேண்டும். ஒருவன்மட்டும் குறுக்கே உழுது போனால், நிலம் பாழ்ப்பட்டுப் போகும். வரிசைப்படி நாற்றுநட, பாத்திகட்டி நீர்பாய்ச்ச முடியாது. அதுபோல, எச்செயலையும் ஒழுங்காகச் செய்ய விடாது, குறுக்கே மறித்துத் தடை ஏற்படுத்துவதைக் குறுக்குச் சால் ஓட்டுவதென்பர்.

நன்றி : தமிழண்ணலின் "உங்கள் தமிழைத் தெரிந்துகொள்ளுங்கள்"

# பழங்குடியினர் நல இயக்ககத்தில் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம் (19.12.2022)







சென்னை, பழங்குடியினர் நல இயக்ககத்தில் 19.12.2022ஆம் நாள் துறைசார் புதியகலைச்சொற்கள் குறித்தகலந்தாய்வுக்கூட்டம்நடைபெற்றது. இக்கூட்டத்தில் பழங்குடியினர் நல இயக்ககத்தின் இணை இயக்குநர் திரு.சுரேஷ்குமார் அவர்கள் கலந்துகொண்டு வரவேற்புரை நிகழ்த்தினார். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் துறைசார் புதிய கலைச்சொற்கள் பற்றி நோக்கவுரையாற்றினார். இத்திட்டத்தின் ஒருங்கிணைப்பாளர் திரு. வே.பிரபு அவர்கள் அறிமுகவுரையாற்றினார். கூட்டத்தில் பணியாளர்கள் மற்றும் அலுவலர்கள் கலந்துகொண்டனர்.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 123–ஆவது கூட்டம்




24.12.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 123–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா. கு. ஆல்துரை, திரு.அ.மதிவாணன், ஆகியோர் பங்கேற்றனர். நூல் மதிப்புரையாளரான கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 203 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 124–ஆவது கூட்டம்




30.12.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 124–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா. கு. ஆல்துரை, திரு. அ.மதிவாணன், ஆகியோர் பங்கேற்றனர். நூல் மதிப்புரையாளரான கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 211 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் செயற்பாடுகள் குறித்த ஆய்வுக் கூட்டம்






செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் செயற்பாடுகள் குறித்த ஆய்வுக் கூட்டம் 27.12.2022ஆம் நாள் நடைபெற்றது. இக்கூட்டத்தில் தமிழ்நாடு அரசு, சிறப்புத் திட்டச் செயலாக்கத்துறையைச் சார்ந்த புத்தாய்வுத் திட்ட வல்லுநர்கள் செல்வி சோ. இந்திராணி அவர்களும், செல்வி விமலா தேவி அவர்களும் கலந்துகொண்டு இயக்ககச் செயற்பாடுகளைக் கேட்டறிந்தனர். அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் இயக்ககத்தின் செயற்பாடுகளை மின்காட்சித் திரை (Powerpoint) வழியாக எடுத்துரைத்து விளக்கினார்கள். கூட்டத்தில் இயக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர், தொகுப்பாளர்கள், கண்காணிப்பாளர், சுருக்கெழுத்துத் தட்டச்சர், கணிப்பொறியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"சென்றிடுவீர் எட்டுத் திக்கும் – கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்"

– மகாகவி பாரதியார்.

அன்னைத்தமிழின் சொல்வளத்தில் காலந்தோறும் கலைச்சொற்கள் இன்றியமையாப் பங்குவகித்துள்ளன. மருத்துவம், பொறியியல் உள்ளிட்ட அனைத்துத் துறைகளையும் அன்னைத் தமிழில் கற்பிப்பதற்கும், பிறநாட்டு நல்லறிஞர் படைப்புகளைப் பைந்தமிழில் மொழிபெயர்ப்பதற்கும், மொழிபெயர்ப்புகள் உயிர்ப்புடன் அமைவதற்கும் கலைச்சொற்கள் படைக்கப்படவேண்டியது காலத்தின் தேவையாகும். இந்நிலையில், இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 64–66 வரையிலான அமர்வுகள் 2022 திசம்பர் 16, 23, 30 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 16.12.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**மரு. பா. காந்தரூபன்**
மருத்துவ வேதியியல் மற்றும் குருதிப் பரிமாற்ற வல்லுநர், செருமனி



**மரு. சுப. திருப்பதி**
முதன்மை மூளை நரம்பியல் அறுவை சிகிச்சை சிறப்பு மருத்துவர், திருச்சிராப்பள்ளி



**முனைவர் ஜெ. வினாயகம்**
பொருளாளர்,
தைவான் தமிழ்ச்சங்கம், தைவான்



**முனைவர் து.ஜானகி**
உதவிப் பேராசிரியர்,
முதுநிலை ஆராய்ச்சியாளர்,
அயல்நாட்டுத் தமிழர்புலம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை



**திரு. இராஜா சிவகுரு**
சமையற்கலை வல்லுநர், அமெரிக்கா

## 23.12.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. ப. தியான்**
தமிழாசிரியர், செருமனி



**திரு. தி. இரவீந்திரன்**
தகவல் தொழில்நுட்பவியலாளர்,
செருமனி



**மரு. ப.நிர்மலா தேவி**
பேராசிரியர் (ம) துறைத்தலைவர்,
தோல் – பால்வினை (ம) தொழுநோய் துறை,
திருநெல்வேலி மருத்துவக்கல்லூரி மற்றும்
மருத்துவமனை, திருநெல்வேலி



**பேரா. முனைவர் மா. மாதரி**
முன்னை புல முதன்மையர், வணிகவியல் துறை,
கோயம்புத்தூர்

## 30.12.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. தி. இரவீந்திரன்**
தகவல் தொழில்நுட்பவியலாளர்,
செருமனி



**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம்,
பிரான்சு



**முனைவர் சீ. சரவணஜோதி**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, தியாகராசர் கல்லூரி,
மதுரை



**முனைவர் துரை மணிகண்டன்**
இணையத் தமிழ் ஆய்வாளர், திருச்சிராப்பள்ளி

# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

### மரு. பா. காந்தரூபன்

renal tubule – சிறுநீரகத்தியக் குழாய்
afferent arteriole – உட்செல்லும் நுண்தமனி
efferent arteriole – வெளியேறும் நுண்தமனி

### முனைவர் ஜெ. வினாயகம்

Ketone –இருபிணையுரி
Ester – மணமி
Hydroxyl – நீருயிரியம்

### திரு. இராஜா சிவகுரு

Squash soup – பழப்பிழிவுச் சாறு
Cream of Carrot soup– செம்மங்கிப் பாற்சாறு
Cream of Cauliflower soup – காற்பூப் பாற்சாறு

### மரு. சுப. திருப்பதி

Forethought/Prudent – ஆவது அறிவு
Anticipation – எதிரதாக் காக்கும் அறிவு
Omniscience – வாலறிவு

### முனைவர் து.ஜானகி

Metastatement – வருவதுகுறித்துரை
Paralinguistics – ஒலிமொழியியல்
Part– whole – சினை– முதல்

### திரு. ப. தியான்

radiator – சூடாக்கி
washing machine – துவைப்பி
socket – மின்தொடர்பி

### திரு. தி. இரவீந்திரன்

malicious joy – கெடுவின்பம்
head cinema – அகக்காட்சி
thought experiment – கற்பனை ஆய்வு

### மரு. ப.நிர்மலா தேவி

Anagen hair – வளர் முடி; வளர் மயிர்
Telogen hair – தேய் முடி; தேய் மயிர்
Categen hair – தேய்வுறு முடி; தேய்வுறு மயிர்

### பேரா. முனைவர் மா. மாதரி

elcredere commission – பிணைத்தரகு
Cognizance of offence – குற்றத்தின் ஆழம்
Acceptance houses – ஏற்பகங்கள்

### திரு. தி. இரவீந்திரன்

White win – வெண்பிழி
Red win – செம்பிழி
Champagne – மகிழ்பிழி

### பொறிஞர் பத்மப்ரியா இராகவன்

Place log – இடம்பெயர் களைப்பு
Permacrisis – தொடரிடர்
Autonetics – தன்னியக்கவியல்

### முனைவர் சீ. சரவணஜோதி

Fantasy games – புத்தாட்டங்கள்
Messenger Kids – குழந்தைகளுக்கான செய்திப்பகிரி
News feed – செய்திப் பதிவு

### முனைவர் துரை. மணிகண்டன்

OCR – எழுத்துணரி
Broadband – ஆலலை
Inkjet – மைவீச்சு

என்றும் தமிழ் வளர்க! – கலை
யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக!
இன்பம் எனப்படுதல் – தமிழ்
இன்பம் எனத் தமிழ் நாட்டினர் எண்ணுக!
–பாவேந்தர் பாரதிதாசன்